18th March 1959]

SRI S. LAZAR : ஸார், உணவுப் பொருள்களுக்குக் குறைந்தபட்ச விலை நிர்ணயிக்க முற்படுவதன் காரணத்தினால், உற்பத்தி விலையை ஜில்லா வாரியாக எடுக்கும் நடவடிக்கையை அரசாங்கம் மேற்கொள்ளுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதுதான் நான் இப்போது பதில் சொன்னது. விஞ்ஞான முறையில் பரிசீலனை செய்ய வேண்டிய விஷயம் இது. மத்திய அரசாங்கத்தோடு இதைப்பற்றி யோசித்து என்ன செய்ய வேண்டுமென்பதைப் பற்றி நடவடிக்கை எடுக்கலாம்.

SRI T. S. RAMASWAMY PILLAI : நம் விதைப் பண்ணைகளிலும் சரி, அல்லது ஆராய்ச்சிப் பண்ணைகளிலும் சரி, ஒரு ஏக்கருக்கு நல்ல முறையில் நெல் சாகுபடி செய்ய என்ன ஆகிறது என்று உத்தேசமான கணக்காவது இருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஒவ்வொரு இடத்தையும் ஒவ்வொரு பண்ணையையும், ஒவ்வொரு நிலத்தையும் பொறுத்திருக்கிறது. ஒவ்வொன்றில் லாபமும் வந்திருக்கிறது. விதைப் பண்ணையெல்லாம் ஆராய்ச்சி செய்யக்கூடிய இடம், அரசாங்கம் நடத்துவதால் சிப்பந்திகள் இருப்பதால் அந்தச் செலவெல்லாம் இருக்கிறது. இப்போது கூட கணக்கு இருக்கிறது. புதிதாகப் பரிசீலனை செய்யும் போது இதை ஆதாரமாக வைத்துக்கொள்ளலாம்.

SRI R. SRINIVASA IYER : Sir, apart from Research Stations and Seed Farms, with the particulars of wages, prices and other necessaries of cultivation expenses available with the Government, will Government consider the necessity of calculating the cost of cultivation per acre of important crops like paddy, sugarcane, etc?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, as I have already pointed out, the cost varies not only from district to district, from taluk to taluk, but from village to village. Therefore I cannot give an assurance to the hon. Member, that I can undertake a survey like that.

SRI N. K. PALANISAMI : விலைவாசி கணக்கிடும்போது சர்க்கார் போடக்கூடிய வரி, இன்னும் அவர்களுடைய கடன், போக்குவரத்து இவைகளெல்லாம் இருக்கின்றன. இவைகளைக் குறைத்தால்தான் அவர்களுக்கு ஓரளவு லாபம் கிடைக்கும் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அதன் அடிப்படையில் அதைக் கழித்து விலை நிர்ணயம் செய்வது பற்றி அரசாங்கம் யோசிக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இவைகளை யெல்லாம் வைத்துக் கொண்டுதான் விவசாயிகளுக்குக் கட்டுபடியாகக்கூடிய அளவுக்கு விலை நிர்ணயம் செய்யப்படுகிறது.

*Cottage Industries*

*858 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இம் மாநிலத்தில் குடிசைத் தொழில் மூலம் என்னென்ன பொருள் உற்பத்தியாகிறது ?

(ஆ) அவை ஒவ்வொன்றில் கடந்த ஆண்டு உற்பத்தியான ஜில்லா வாரி அளவும் பெருமானமும் எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

a. Printed as Appendix I on pages 640-643 infra.

[18th March 1959

SRI A. VEDARATHNAM : இப்பொழுது இந்த மாநிலத்தில் நடந்து வருகிற குடிசைக் கைத்தொழில்கள் தவிர ஜப்பானில் இந்த மாதிரியான குடிசைக் கைத்தொழில்கள் ஏராளமாக நடந்து வருகின்றன. அங்குள்ளவர்கள் மிகவும் திறமையாக இந்தத் தொழிலைச் செய்து வருகிறார்கள். அத்தகைய தொழில்களை நம்முடைய மாநிலத்தில் அமுலுக்குக்கொண்டு வர அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறதா ? அப்படியானால் அதன் விவரம் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நம்முடைய மாநிலத்தில் அமுல்படுத்தப் பட்டிருக்கிற ஜப்பானியக் குடிசைக் கைத்தொழில்கள் சரியாக இன்னும் பல இடங்களில் விஸ்தரிக்கப்படவில்லை. அது ஒரு உற்பத்திச் சாதனமாக இருந்தாலும் அந்தக் குடிசைக் கைத்தொழில்களைப் பற்றி ஜப்பானுக்குப் போய்ப் பார்த்து வந்தவர்களிடம் இருந்து கேட்டுத் தெரிந்து இன்னும் பரவலாக அந்தத் தொழிலை விஸ்தரிக்க கவனம் செலுத்தப்படும்.

SRI A. VEDARATHNAM : இப்பொழுது இந்த மாநிலத்தில் நடைபெறுகின்ற குடிசைக் கைத்தொழில்கள் எல்லாம் லாபகரமான முறையில் நடந்து வருகிறதா ? இல்லையென்றால் அது லாபகரமாக நடைபெற என்னென்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சில தொழில்கள் லாபகரமாக நடந்து வருகின்றன. ஆனால் லாபகரமாக நடத்தப் பல வசதிகள் வேண்டும். மற்றும் நிபுணர்களுடைய ஆலோசனையும் வேண்டும். அப்படி இருந்தால் இந்தத் தொழிலை இன்னும் விரிவு படுத்த முடியும். இதையெல்லாம் கைத்தொழில் இலாகா பரிசீலனை செய்து அந்தத் தொழிலுக்கான பயிற்சி அளிக்கப்படும். அவ்வாறு பயிற்சி கொடுக்கப்பட்டு வருகிறது. " இண்டஸ்ட்ரியல் கோவாப்பரேட்டிவ் " அமைத்து பயிற்சி கொடுக்கப்பட்டு வருகிறது.

SRI R. KRISHNASAMI NAIDU : குடிசைக் கைத்தொழில்களை கிராமங்களில் எவ்வாறு நடத்தவேண்டுமென்பதற்கு ஆலோசனை தரப்படும் முறையில் " மூலப்பொருள்கள் எங்கு கிடைக்கும் ? எவ்வளவு முதலீடு தேவை ? எந்தெந்தப் பிரதேசங்களில் என்னென்ன தொழில்களை ஆரம்பிக்கலாம் " என்பதற்கான பிரசுரங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. அதற்கான பிரசுரங்கள் தயாரித்து எல்லோருக்கும் கொடுக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. தனியாகக் கேள்வி கேட்டால் பார்த்துச் சொல்லுகிறேன். சிறிய கைத்தொழில்களைப் பொறுத்தவரை ஒவ்வொரு மாவட்டத்திலும் இருக்கக் கூடிய " அஸிஸ்டெண்ட் டைரக்டர் ஆப் இண்டஸ்ட்ரீஸ் " இது மாதிரி யோசனைகள் கொடுக்கிறார்கள்.

SRI J. MATHA GOWDER : இந்த மேஜை மேல்வைத்திருக்கப்பட்ட பட்டியலைப் பார்த்தால் நீலகிரி ஜில்லாவில் குடிசைக் கைத்தொழில்கள் இருக்கிறதா என்பதுபற்றி ஒரு விவரமும் இல்லை. அங்கு குடிசைக் கைத்தொழில்களை ஆரம்பிக்க வசதி இல்லையா ? அதனுடைய விபரம் என்ன ? அங்கு இந்தத் தொழில்களை ஆரம்பிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் அங்கத்தினர் அவர்கள் அங்குள்ள தோட்டத் தொழிலாளர்கள் நலனில் அக்கறையுள்ளவர்கள். அவர்களுக்கென்று சில குடிசைத் தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. அங்கு இந்த மாதிரி தொழில்களை ஆரம்பிக்கத் தொழிலாளர்கள் தலைவர்களும் அக்கறை எடுத்துக்கொள்ளுவதில்லை தொழில் அதிபர்களும் அக்கறை எடுத்துக்கொள்ளுவதில்லை.